அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ ஶ்ரீ: ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஶ்ரீஜக³த்³கு³ருக்³ரந்த²மாலா

# ॥ स्वात्मप्रकाशिका ॥

# ॥ ஸ்வாத்மப்ரகாஶிகா ॥

ஶ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஶ்ரீரங்கம்.
1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத்தால் பிரசுரிக்கப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலையில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளிய கிரந்தங்களில் **ஸ்வாத்மப்ரகாஶிகா**, என்ற பிரகரணத்துக்கு வழக்கம்போல பதவுரை பொழிப்புரை, விரிவுரைகளுடன் வெளிவந்துள்ளன.

**ஸ்வாத்மப்ரகாஶிகா**: ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு தெரிந்துகொண்ட ஓர் சிஷ்யன், முன்போலவே மறுபடியும் பிரபஞ்சம் தனக்கு உண்மை போலவே தோன்றுவதைக் கண்டு, குருவினிடம் கேட்கிறுன். 4-வது சுலோகம் முதல் 19-வது சுலோகம் வரை "எல்லாம் ஸச்சிதானந்த வஸ்துவே, பிரபஞ்சம் வெறும் தோற்றம் தான்" என்பதை பல திருஷ்டாந்தங்களால் விளக்கி குரு உபதேசிக்கிறுர். குருவின் அருளால் ஸந்தேஹம் நீங்கப்பெற்ற சிஷ்யன் 20-வது சுலோகம் முதல் 67-வது சுலோகம் வரை தன் அனுபவத்தை வெளியிடுகிறுன். தேஹாதிகளால் நடத்தப்பெறும் பிரபஞ்ச வியவஹாரம் ஒன்றிலாவது கொஞ்சமும் ஆத்மாவுக்கு ஸம்பந்தம் கிடையாது என்பதை நன்கு உணர்ந்த ஞானி ராஜ்யபரிபாலனம்வரை எந்தக் காரியத்தைச் செய்த போதிலும் அவனுடைய ஆத்மானுபவத்திற்குச் சிறிதும் குறைவு ஏற்படாது என்பதை நன்கு எடுத்துக் காட்டுகிறுன். இது போல் தத்வ பரிசீலனம் செய்யும் மற்றவர்களுக்கும் இதே அனுபவம் ஏற்படும் என்பதைக் கடைசி சுலோகம் கூறுகிறது.

ஸ்ரீ பகவத்பாதாள் அருளிய உயர்ந்த இந்த நூல் சிறந்த முறையில் வெளிவரும்படி பரமானுக்ரஹம் செய்து உள்ள சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் மலரடிகளை எப்பொழுதும் பணிவோமாக.

**K.V. சுப்பரத்னம் அய்யர்**,
பொதுக் கார்யதர்சி.
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

॥ श्रीः ॥

॥ ஶ்ரீ: ॥

# ॥ स्वात्मप्रकाशिका ॥

# ॥ ஸ்வாத்மப்ரகாஶிகா ॥

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[ப்ரஹ்மம்தான் ஸத்யம், ப்ரஹ்மத்தை அறியாததினுலேயே அதில் பிரபஞ்சம் தோன்றுகிறது, ஜீவனுகத் தோன்றுகிறவனுடைய வாஸ்தவமான ஸ்வரூபம் பிரஹ்மமே யாகும், ஆகையால் அவனிடம் தோன்றும் ஸம்ஸாரமும் கல்பிதமேயாகும், என்று வேத வாக்கியங்களாலும், குருவின் உபதேசத்தினுலும், யுக்தியினுலும் எவ்வளவு நிச்சயமாகத் தெரிந்துவிட்டபோதிலும் இவ்விஷயம் நன்கு அனுபவத்திற்கு வரவில்லையேயென்று கவலைப்படும் சிஷ்யனுக்கு அனுபவத்திற்கு வரும்படி ஆத்மஸ்வரூபத்தை நன்கு விளக்கிக் காட்டுவதற்காக 68 சுலோகங்கள் கொண்ட இச்சிறு பிரகரணம் ஸ்ரீமத் ஆசார்யாரால் அனுக்ரஹிக்கப்பட்டிருக்கிறது. இதில் கண்டபடி அனுஸந்தானம் செய்கிறவர்களுக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரம் அவசியம் ஏற்படுமென்று கடைசியில் உறுதியும் சொல்கிருர்கள்.]

**जगत्कारणमज्ञानमेकमेव चिदन्वितम् ।**
**एक एव मनः साक्षी जानात्येवं जगत्त्रयम् ॥ १ ॥**

**ஜக³த்காரணமஜ்ஞானமேகமேவ சித³ன்விதம் ।**
**ஏக ஏவ மன꞉ ஸாக்ஷீ ஜானுத்யேவம் ஜக³த்த்ரயம் ॥ 1 ॥**

**जगत्कारणं** = ஜகத்திற்குக் காரணமாக இருப்பது,
**ஜக³த்காரணம்**

**चिदन्वितं** = சைதன்யத்தோடு ஸம்பந்தப்பட்ட,
**சித³ன்விதம்**

**अज्ञानं** = அக்ஞானம்,
**அஜ்ஞானம்**

**एकं एव** = ஒன்றுதான்,
**ஏகம் ஏவ**

**जगत्त्रयं** = மூவுலகமும்,
**ஜக³த்த்ரயம்**

**एवं** = இவ்விதம்தான் என்று,
**ஏவம்**

**मनः साक्षी** = மனதிற்கும் ஸாக்ஷியாயிருக்கிற,

**மன: ஸாக்ஷீ**

**एक एव** = ஒருவரே,

**ஏக ஏவ**

**जानाति** = அறிகிருர்.

**ஜாஞதி**

ஜகத்திற்குக் காரணமாயிருப்பது சைதன்யத்தோடு ஸம்பந்தப்பட்ட அக்ஞானம் ஒன்றுதான். மூவுலகமும் இவ்விதம்தான் என்று மனதிற்கும் ஸாக்ஷியாயிருக்கிற ஒருவரே அறிகிறார். **(1)**

## विवेकयुक्तबुद्ध्याऽहं जानाम्यात्मानमद्वयम् ।
## तथाऽपि बन्धमोक्षादिव्यवहारः प्रतीयते ॥ २ ॥

**விவேகயுக்தபு³த்³த⁴யா(அ)ஹம் ஜாஞம்யாத்மானமத்³வயம் ।**
**ததா²(அ)பி ப³ந்த⁴மோக்ஷாதி³வ்யவஹாரः ப்ரதீயதே ॥ 2 ॥**

**विवेकयुक्तबुद्ध्या** = விவேகத்தோடு கூடின புத்தியினுல்,

**விவேகயுக்தபு³த்³த⁴யா**

**अहं** = நான்,

**அஹம்**

**अद्वयं** = இரண்டற்றதான,

**அத்³வயம்**

**आत्मानं** = ஆத்மாவை,

**ஆத்மானம்**

**जानामि** = அறிகிறேன்,

**ஜாநாமி**

**तथाऽपि** = அப்படியிருந்தும்,

**ததா²(அ)பி**

**बन्धमोक्षादिव्यवहारः** = பந்தம், மோக்ஷம், முதலான வியவஹாரம்,

**ப³ந்த⁴மோக்ஷாதி³வ்யவஹாரः**

**प्रतीयते** = தோன்றிக்கொண்டேயிருக்கிறது.

**ப்ரதீயதே**

'ஆத்மா ஒன்றுதான், அதைக் காட்டிலும் வேருன இரண்டாவது வஸ்துவே கிடையாது என்று விவேகத்தோடு கூடின புத்தியினுல் நான் அறிகிறேன். அப்படி யிருந்தும் பந்தம், மோக்ஷம் முதலான வியவஹாரம் தோன்றிக்கொண்டே இருக்கிறது. **(2)**

**विवर्तोऽपि प्रपञ्चो मे सत्यवद्भाति सर्वदा ।**
**इति संशयपाशेन बद्धोऽहं छिन्धि संशयम् ॥ ३ ॥**

**விவர்தோ(அ)பி ப்ரபஞ்சோ மே ஸத்யவத்$^{3}$பா$^{4}$தி ஸர்வதா$^{3}$ ।**
**இதி ஸம்ஶயபாஶேன ப$^{3}$த்$^{3}$தோ$^{4}$(அ)ஹம் சி$^{2}$ந்த்$^{3}$தி$^{4}$ ஸம்ஶயம்॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **प्रपञ्चः** ப்ரபஞ்ச: | = | பிரபஞ்சமானது, |
| **विवर्तोऽपि** விவர்தோ(அ)பி | = | வெறும் தோற்றமாயிருந்தபோதிலும், |
| **मे** மே | = | எனக்கு, |
| **सर्वदा** ஸர்வதா$^{3}$ | = | எப்பொழுதும், |
| **सत्यवत्** ஸத்யவத் | = | உண்மைபோலவே, |
| **भाति** பா$^{4}$தி | = | பிரகாசிக்கிறது, |
| **इति** இதி | = | என்கிற, |
| **संशयपाशेन** ஸம்ஶயபாஶேன | = | ஸம்சயமாகிற கயிற்ருல், |
| **अहं** அஹம் | = | நான், |
| **बद्धः** ப$^{3}$த்$^{3}$த$^{4}$: | = | கட்டுப்பட்டவனுக (இருக்கிறேன்.), |
| **संशयं** ஸம்ஶயம் | = | அந்த ஸம்சயத்தை, |
| **छिन्धि** சி$^{2}$ந்த்$^{3}$தி$^{4}$ | = | அறுத்துவிடும். |

பிரபஞ்சமானது வெறும் தோற்றமாக இருந்த போதிலும் எனக்கு எப்பொழுதும் உண்மைப்பொருளாகவே விளங்குகிறது. இவ்விஷயத்தில் ஸம்சயமாகிற கயிற்ருல் நான் கட்டுப்பட்டவனுக இருக்கிறேன். அந்த ஸம்சயத்தை அறுத்துவிடும்.

[சாஸ்திரங்களில் பிரஹ்மமாகிற ஸத்ய வஸ்துவில் அக்ஞானத்தினுல் கல்பி க்கப்பட்டு இப்பிரபஞ்சம் தோன்றுகிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது. அது யுக்திக் கும் பொருத்தமாகவே இருக்கிறது. ஆனுலும் அனுபவத்திற்கு வரவில்லையே? என்று

தன்னுடைய நிலையை முதல் மூன்று சுலோகங்களால் சிஷ்யன் குருவினிடம் தெரிவிக்கிறான்.] **(3)**

## एवं शिष्यवचः श्रुत्वा गुरुराहोत्तरं स्फुटम् ।

**ஏவம் ஶிஷ்யவச꞉ ஶ்ருத்வா கு³ருராஹோத்தரம் ஸ்பு²டம் ।**

**एवं** = இவ்விதமாக,

**ஏவம்**

**शिष्यवचः** = சிஷ்யனுடைய வார்த்தையை,

**ஶிஷ்யவச꞉**

**श्रुत्वा** = கேட்டு,

**ஶ்ருத்வா**

**गुरुः** = குருவானவர்,

**கு³ரு꞉**

**स्फुटम्** = தெளிவாக,

**ஸ்பு²டம்**

**उत्तरं** = பதிலை,

**உத்தரம்**

**आह** = சொல்கிறார்.

**ஆஹ**

இவ்விதமாக சிஷ்யனுடைய வார்த்தையைக் கேட்டு குருவானவர் தெளிவாக பதில் கூறுகிறார்.

## नाज्ञानं न च बुद्धिश्च न जगत्न च साक्षिता ॥ ४ ॥
## बन्धमोक्षादयः सर्वे कृताः सत्येऽद्वये त्वयि ।

**நாஜ்ஞானம் ந ச பு³த்³தி⁴ஶ்ச ந ஜக³த்ன ச ஸாக்ஷிதா ॥ 4 ॥**
**ப³ந்த⁴மோக்ஷாத³ய꞉ ஸர்வே க்ருதா꞉ ஸத்யே(அ)த்³வயே த்வயி ।**

**अज्ञानं** = அக்ஞானம் என்பதும்,

**அஜ்ஞானம்**

**न** = கிடையாது,

**ந**

**बुद्धिश्च** = புத்தியும்,

**பு³த்³தி⁴ஶ்ச**

**न** = கிடையாது,

**ந**

| | | |
|---|---|---|
| **जगत्न च**<br>**ஜக³த்ன ச** | = | ஜகத்தும், |
| **न**<br>**ந** | = | கிடையாது, |
| **साक्षिता च**<br>**ஸாக்ஷிதா ச** | = | ஸாக்ஷியாயிருக்கும் தன்மையும், |
| **न**<br>**ந** | = | கிடையாது, |
| **बन्धमोक्षादय:**<br>**ப³ந்த⁴மோக்ஷாத³ய:** | = | பந்தம், மோக்ஷம் முதலான, |
| **सर्वे**<br>**ஸர்வே** | = | எல்லா வியவஹாரங்களும், |
| **सत्ये**<br>**ஸத்யே** | = | ஸத்யமான, |
| **अद्वये**<br>**அத்³வயே** | = | இரண்டற்ற, |
| **त्वयि**<br>**த்வயி** | = | உன்னிடத்தில், |
| **कृता:**<br>**க்ருதா:** | = | கல்பிக்கப்பட்டவைகளே யாகும். |

அக்ஞானம் என்பதும் கிடையாது, புத்தியும் கிடையாது, ஜகத்தும் கிடையாது, ஸாக்ஷியாயிருக்கும் தன்மையும் கிடையாது. பந்தம், மோக்ஷம் முதலான எல்லா வியவஹாரங்களும் ஸத்யமான இரண்டற்ற உன்னிடத்தில் கல்பிக்கப்பட்டவைகளே யாகும்.

[சிஷ்யன் தன்னுடைய ஸந்தேஹத்தைச் சொல்லும் போது அக்ஞானம், புத்தி, ஜகத், ஸாக்ஷி, பந்தம், மோக்ஷம் முதலான வார்த்தைகளை உபயோகித்திருக்கிறன். அந்தந்த வார்த்தைகளால் குறிக்கப்படும் பொருள்கள் வாஸ்தவமாக இருப்பதாக சிஷ்யனுக்கு எண்ணமிருக்குமேயானல் அதை முதலில் நிவர்த்தி செய்யவேண்டு மென்று கருதி குரு இவ்விதம் சொல்கிறர். ஆத்மா என்பது ஒன்று தான் வாஸ்தவ மாயுள்ள வஸ்து, அதைத்தவிற வேறு இரண்டாவது வஸ்துவே கிடையாது, அந்த ஆத்மாதான் நீ, இதை அஸ்திவாரமாக வைத்துக்கொண்டுதான் எல்லாத் தோற்றங்க ளும் ஏற்படுகின்றன, என்ற வேதாந்த ஸித்தாந்தத்தை முதலில் எடுத்துச் சொல்லி விட்டு பின்னல் இவ்விஷயத்தை திருஷ்டாந்தங்களினாலும் யுக்திகளினலும் மனஸில் நன்கு பதியும்படி உபதேசிக்கிறர்.]

## भातीत्युक्ते जगत् सर्वं सद्रूपं ब्रह्म तद्भवेत् ॥ ५ ॥

**பா⁴தீத்யுக்தே ஜக³த் ஸர்வம் ஸத்³ரூபம் ப்³ரஹ்ம தத்³ப⁴வேத் ॥ 5 ॥**

**सर्पादौ रज्जुसत्तेव ब्रह्मसत्तै केवलम् ।**
**प्रपञ्चाधाररूपेण वर्तते तज्जगन्न हि ॥ ६ ॥**

**ஸர்பாதௌ³ ரஜ்ஜுஸத்தேவ ப்³ரஹ்மஸத்தை கேவலம் ।**
**ப்ரபஞ்சாதா⁴ரரூபேண வர்ததே தஜ்ஜக³ன்ன ஹி ॥ 6 ॥**

| | | |
|---|---|---|
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லா, |
| **जगत्**<br>**ஜக³த்** | = | ஜகத்தும், |
| **भाती**<br>**பா⁴தீ** | = | பிரகாசிக்கிறது, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **उक्ते**<br>**உக்தே** | = | சொன்னால், |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **सद्रूपं**<br>**ஸத்³ரூபம்** | = | இருக்கும் ஸ்வரூபத்தையுடைய, |
| **ब्रह्म**<br>**ப்³ரஹ்ம** | = | பிரஹ்மமாகத்தான், |
| **भवेत्**<br>**ப⁴வேத்** | = | இருக்கவேண்டும், |
| **सर्पादौ**<br>**ஸர்பாதௌ³** | = | பாம்பு முதலானவைகளில்,<br>(தோன்றும் இருப்பானது), |
| **रज्जुसत्ता**<br>**ரஜ்ஜுஸத்தா** | = | கயிற்றின் இருப்பு தான், |
| **इव**<br>**இவ** | = | அதைப்போல, |
| **ब्रह्मसत्ता एव**<br>**ப்³ரஹ்மஸத்தா ஏவ** | = | பிரஹ்மத்திலுள்ள இருப்புதான், |
| **केवलं**<br>**கேவலம்** | = | தனித்து (மாறுதல் அடையாமல்), |
| **प्रपञ्चाधाररूपेण**<br>**ப்ரபஞ்சாதா⁴ரரூபேண** | = | பிரபஞ்சத்திற்கு ஆதாரமாயிருக்கும்<br>தன்மையோடு, |
| **वर्तते**<br>**வர்ததே** | = | இருந்துவருகிறது, |

| | | |
|---|---|---|
| **तत्**<br>**தத்** | = | ஆகையால், |
| **जगत्**<br>**ஜக³த்** | = | ஜகத் என்பது, |
| **न हि**<br>**ந ஹி** | = | தனித்து இருப்பு உடையது) அல்ல. |

எல்லா ஜகத்தும் பிரகாசிக்கிறதென்று சொன்னுல், அது இருக்கும் ஸ்வரூபத்தையுடைய பிரஹ்மமாகத்தான் இருக்கவேண்டும். பாம்பு முதலானவைகளில் (தோன்றும் இருப்பானது) கயிற்றின் இருப்புதான், அதைப்போல பிரஹ்மத்திலுள்ள இருப்புதான் தனித்து (மாறுதல் அடையாமல்) பிரபஞ்சத்திற்கு ஆதாரமாயிருக்கும் தன்மையோடு இருந்துவருகிறது. ஆகையால் ஜகத் என்பது (தனித்து இருப்பு உடையது) அல்ல.

[ஒரு பதார்த்தம் பிரகாசிக்கிறது என்றுல், அதை இருக்கும் பொருளாகத்தான் சொல்லவேண்டும். இருக்கும் பொருள்தான் உலகில் பிரகாசிக்க முடியும். ஜகத் பிரகாசிக் கிறபடியால் அதையும் 'இருக்கிறது' என்றே சொல்ல வேண்டும். ஆனுல் 'இருக்கிறது' என்ற ஸ்வபாவம் பிரஹ்மத்தையே சேர்ந்தது. ஆகையால் 'இருக்கிறது' என்று தோன்றும் ஜகத்தும் பிரஹ்மமேயாகும். இருக்கிற கயற்றில்தான் பாம்பு என்ருே, பாம்பு மாலை என்றோ, தண்டம் (தடி) என்ருே, பலவிதத் தோற்றங்கள் ஏற்படும். அத்தோற்றங்கள் தோன்றிக்கொண்டிருக்கும்போது "பாம்பு இருக்கிறது, மாலை இருக்கிறது, தண்டம் (தடி) இருக்கிறது" முதலான விதமாகவே வியவஹார மும் ஏற்படுகிறது. வாஸ்தவத்தில் பாம்பு முதலானவைகளில் தோன்றும் 'இருக்கிறது' என்ற அம்சம் கயிற்றையே சேர்ந்தது. கயிறு ஒருவித மாறுதலையும் அடையாமல் ஒரேவிதமாய் இருந்துகொண்டு பலவித கல்பனைகளுக்கு ஆதாரமாக இருக்கிறது. இந்த 'இருக்கிறது' என்ற அம்சம் கயிற்றி னுடையதானதினுல் அதைப் பாம்பு முதலானவைகளிலிருந்து பிரித்துவிட்டால் அவை யாவும் இல்லையென்றே ஏற்படும். அப்படியே ஸத்தாக இருக்கும் பிரஹ்மம் அஸத்தாயுள்ள பிரபஞ்சத்திற்கு ஆதாரமாக இருப்பதினுல் அந்த பிரபஞ்சமும் ஸத்தாகத்தோன்றுகிறது. வாஸ்தவத்தில் அதற்கு ஸத்தை கிடையாது.] **(5-6)**

## यथेक्षुमभिसंव्याप्य शर्करा वर्तते तथा ।
## आश्चर्यब्रह्मरूपेण त्वं व्याप्तोऽसि जगत्त्रयम् ॥ ७ ॥

**யதே²க்ஷுமபி⁴ஸம்வ்யாப்ய ஶர்கரா வர்ததே ததா² ।**
**ஆஶ்சர்யப்³ரஹ்மரூபேண த்வம் வ்யாப்தோ(அ)ஸி ஜக³த்த்ரயம் ॥ 7 ॥**

| | | |
|---|---|---|
| **यथा**<br>**யதா²** | = | எவ்விதம், |
| **शर्करा**<br>**ஶர்கரா** | = | சர்க்கரையானது, |

| | | |
|---|---|---|
| **इक्षुं**<br>**இக்ஷும்** | = | கரும்பை, |
| **अभिसंव्याप्य**<br>**அபி⁴ஸம்வ்யாப்ய** | = | எல்லாவிடத்திலும் நன்கு வியாபித்து, |
| **वर्तते**<br>**வர்ததே** | = | இருக்கிறதோ, |
| **तथा**<br>**ததா²** | = | அவ்விதமே, |
| **आश्चर्यब्रह्मरूपेण**<br>**ஆஶ்சர்யப்³ரஹ்மரூபேண** | = | ஆச்சர்யமான பிரஹ்மம் என்ற ரூபத்துடன், |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **जगत्त्रयम्**<br>**ஜக³த்த்ரயம்** | = | மூவுலகத்தையும், |
| **व्याप्तः**<br>**வ்யாப்தஃ** | = | வியாபித்தவனுக, |
| **असि**<br>**அஸி** | = | இருக்கிறுய். |

எவ்விதம் சர்க்கரையானது கரும்பை எல்லாவிடத்திலும் நன்கு வியாபித்துக் கொண்டு இருக்கிறதோ, அவ்விதமே ஆச்சர்யமான பிரஹ்மம் என்ற ரூபத்துடன் நீ மூவுலகத்தையும் வியாபித்தவனுக இருக்கிறுய்.

[கரும்பை எந்த இடத்தில் ருசி பார்த்தாலும் தித்திப்பாக இருப்பதற்குக் காரணம் தித்திப்பையே ஸ்வபாவமாக உடைய சர்க்கரை அக்கரும்பு முழுவதும் வியாபித்திருப்பது தான். அவ்விதமாகவே ஸத்பதார்த்தமான ஆத்மா பிரஹ்மமாக இருந்துகொண்டு மூவுலகத்தையும் வியாபித்திருக்கிறபடியால் மூவுலகமும் ஸத்தாகத் தோன்றுகிறது] **(7)**

**मरुभूमौ जलं सर्वं मरुभूमात्रमेव तत् ।**
**जगत्त्रयमिदं सर्वं चिन्मात्रं सुविचारतः ॥ ८ ॥**

**மருபூ⁴மௌ ஜலம் ஸர்வம் மருபூ⁴மாத்ரமேவ தத் ।**
**ஜக³த்த்ரயமித³ம் ஸர்வம் சின்மாத்ரம் ஸுவிசாரதஃ ॥ 8 ॥**

| | | |
|---|---|---|
| **मरुभूमौ**<br>**மருபூ⁴மௌ** | = | கானல் தரையில் (தோன்றும்), |
| **तत्**<br>**தத்** | = | அந்த, |

**जलं** = ஜலம்,
**ஜலம்**

**सर्वं** = எல்லாம்,
**ஸர்வம்**

**मरुभूमात्रमेव** = கானல் தரையே தான். (அவ்விதமே),
**மருபூ⁴மாத்ரமேவ**

**सुविचारतः** = நன்கு விசாரம் செய்து பார்த்தால்,
**ஸுவிசாரத:**

**इदं** = இந்த,
**இத³ம்**

**जगत्त्रयं** = மூவுலகம்,
**ஜக³த்த்ரயம்**

**सर्वं** = எல்லாம்,
**ஸர்வம்**

**चिन्मात्रं** = சைதன்யமேதான்.
**சின்மாத்ரம்**

கானல் தரையில் தோன்றும் அந்த ஜலமெல்லாம் கானல் தரையே தான். அவ்விதமே, நன்கு விசாரம் செய்து பார்த்தால் இந்த மூவுலகம் எல்லாம் சைதன்ய மேதான்.

[கரும்பை சர்க்கரை வியாபித்திருக்கிறது என்று சொல்லுகையில் கரும்பு என்பது ஒரு பதார்த்தம், சர்க்கரை என்பது வேறு பதார்த்தம் என்றும், சர்க்கரையைக் கரும்பிலிருந்து பிழிந்து எடுத்துவிட்டால் கரும்புச் சக்கை தனியாக இருக்கலாமே என்றும் எண்ணலாம். அப்படியே ஜகத்து வேறு பிரஹ்மம் வேறு, பிரஹ்மத்தை ஜகத்திலிருந்து பிரித்துவிட்டாலும் ஜகத்து தனியாக இருக்கலாம் என்று நினைக்க இடம் கொடுக்கும். அவ்விதம் எண்ணக்கூடாதென்பதற்காகவே கானல் ஜல திருஷ்டாந்தம் சொல்லப்படுகிறது கானல் ஜலத்திற்கு கானல் தரையைத் தவிர்த்து இருப்பே கிடையாது அவ்விதமே பிரஹ்மத்தைத் தவிர்த்து ஜகத்திற்கு இருப்பு கிடையாது.] **(8)**

**ब्रह्मादिस्तम्बपर्यन्ताः प्राणिनस्त्वयि कल्पिताः ।**
**बुद्बुदादितरङ्गान्ता विकाराः सागरे यथा ॥ ९ ॥**

**ப்³ரஹ்மாதி³ஸ்தம்ப³பர்யந்தா: ப்ராணினஸ்த்வயி கல்பிதா: ।**
**பு³த்³பு³தா³தி³தரங்கா³ந்தா விகாரா: ஸாக³ரே யதா² ॥ 9 ॥**

**ब्रह्मादिस्तम्बपर्यन्ताः** = பிரஹ்மா முதல் சிறு புல் வரையுள்ள,
**ப்³ரஹ்மாதி³ஸ்தம்ப³பர்யந்தா:**

**प्राणिन:** = பிராணிகள்,

**ப்ராணின:**

**त्वयि** = உன்னிடத்தில்,

**த்வயி**

**कल्पिता:** = கல்பிக்கப்பட்டிருப்பவர்கள்,

**கல்பிதா:**

**सागरे** = ஸமுத்திரத்தில்,

**ஸாக$^{3}$ரே**

**बुद्बुदादितरङ्गान्ता:** = நீர்க்குமிழி முதல் அலை வரையில் உள்ள,

**பு$^{3}$த்$^{3}$பு$^{3}$தா$^{3}$தி$^{3}$தரங்கா$^{3}$ந்தா:**

**विकारा:** = மாறுதல்கள்,

**விகாரா:**

**यथा** = எப்படியோ (அப்படி).

**யதா$^{2}$**

ஸமுத்திரத்தில் நீர்க்குமிழி முதல் அலை வரையிலுள்ள மாறுதல்கள் கல்பிக்கப்பட்டிருப்பதுபோல் பிரஹ்மா முதல் சிறு புல் வரையுள்ள பிராணிகள் உன்னிடத்தில் கல்பிக்கப்பட்டிருப்பவர்கள்.

[கானல்ஜலத்தின் ஸமீபம் போய்ப் பார்த்தால் அந்த ஜலமே மறைந்து தரை மாத்திரம் தெரிகிறமாதிரி, பிரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்ட பிறகு ஜகத் பூராவும் மறைந்து விடுமென்று வைத்துக்கொண்டால், பிரஹ்மஞானிக்கு ஜகத் வாஸ்தவமான பதார்த்தமில்லையென்று நன்கு தெரிந்திருந்தபோதிலும் அது அவனுக்கு பிராரப்த கர்ம வசத்தினால் சரீரம் இருக்கும்வரை தோன்றிக்கொண்டுதான் இருக்குமென்பதும், பிரஹ்மஞானிக்கு இரண்டாவதாக ஜகத் தோன்றாத விஷயத்தில் அவரை குருவாக அடைந்து சிஷ்யன் உபதேசம் பெற்றுக்கொள்ள வேண்டும் என்பதும், நியாயமாகாது. ஆகையால் ஜகத்தை பிரஹ்மரூபமாக அறிந்தாலும்கூட ஜகத்திலுள்ள நாமரூபங்கள் தோன்றக் கூடியதே என்று உணர்த்துவதற்காக இந்த ஸமுத்திர திருஷ்டாந்தம். எல்லாம் ஜலமாயிருந்தும், ஜலத்தைத்தவிர வேறில்லாமலிருந்தும், நீர்குமிழி, அலை முதலியவை தனியாகத் தென்படவில்லையா என்று தாத்பர்யம்.] **(9)**

## तरङ्गत्वं ध्रुवं सिन्धुर्न वाञ्छति यथा तथा ।
## विषयानन्दवाञ्छा ते न सदानन्दरूपत: ॥ १० ॥

**தரங்க$^{3}$த்வம் த்$^{4}$ருவம் ஸிந்து$^{4}$ர்ன வாஞ்ச$^{2}$தி யதா$^{2}$ ததா$^{2}$ ।**
**விஷயானந்த$^{3}$வாஞ்சா$^{2}$ தே ந ஸதா$^{3}$னந்த$^{3}$ரூபத: ॥ 10 ॥**

**यथा** = எப்படி,

**யதா$^{2}$**

**सिन्धुः** = ஸமுத்திரமானது,
**ஸிந்து4:**

**तरङ्गत्वं** = அலையாக இருக்கும் தன்மையை,
**தரங்க3த்வம்**

**ध्रुवं** = நிச்சயமாக,
**த்4ருவம்**

**न वाञ्छति** = ஆசைப்படாதோ,
**ந வாஞ்ச2தி**

**तथा** = அப்படியே,
**ததா2**

**सदा** = எப்பொழுதும்,
**ஸதா3**

**आनन्दरूपतः** = ஆனந்தஸ்வரூபமுள்ளவனுதலால்,
**ஆனந்த3ரூபத:**

**ते** = உனக்கு,
**தே**

**विषयानन्दवाञ्छा** = விஷயங்களிலிருந்து கிடைக்கக்கூடிய
**விஷயானந்த3வாஞ்சா2** ஆனந்தத்தில் ஆசை,

**न** = இருக்காது.
**ந**

எப்படி ஸமுத்திரமானது அலையாக இருக்கும் தன்மையை நிச்சயமாக ஆசைப்படாதோ, அப்படியே எப்பொழுதும் நீ ஆனந்தஸ்வரூபமுள்ளவனுதலால் உனக்கு விஷயங்களிலிருந்து கிடைக்கக்கூடிய ஆனந்தத்தில் ஆசை இருக்காது.

[மேலான ஸுகம் கிடைக்கும்போது அதற்கு உள்பட்டதும் அதற்குக் கீழ்பட்டது மான ஸுகத்தில் ஆசை ஏற்படாது. நிரதிசயமான ஆனந்த ஸ்வரூபமாகவே எப்பொ ழுதும் ஆத்மா இருக்கும்போது ஏதோ சிற்சில ஸமயங்களில் விஷயங்களின் சேர்க்கையினுல் கிடைப்பதுபோல் தோன்றும் அல்ப ஸுகத்தில் ஆசை ஏற்பட நியாயமே இல்லை.] **(10)**

## पिष्टं व्याप्य गुडो यद्वन्माधुर्यं न हि वाञ्छति ।
## पूर्णानन्दो जगव्याप्य तदानन्दं न वाञ्छति ॥ ११ ॥

**பிஷ்டம் வ்யாப்ய கு3டோ3 யத்3வன்மாது4ர்யம் ந ஹி வாஞ்ச2தி ।**
**பூர்ணனந்தோ3 ஜக3வ்யாப்ய ததா3னந்த3ம் ந வாஞ்ச2தி ॥ 11 ॥**

**गुडः** = வெல்லமானது,
**கு3ட3:**

| | | |
|---|---|---|
| **पिष्टं**<br>**பிஷ்டம்** | = | மாவை, |
| **व्याप्य**<br>**வ்யாப்ய** | = | யாபித்துக்கொண்டு, |
| **माधुर्यं**<br>**மாது⁴ர்யம்** | = | தித்திப்பை, |
| **यद्वत्**<br>**யத்³வத்** | = | எப்படி, |
| **न हि वाञ्छति**<br>**ந ஹி வாஞ்ச²தி** | = | ஆசைப்படுகிறதில்லையோ, (அப்படியே), |
| **पूर्णानन्दः**<br>**பூர்ணானந்த³:** | = | பரிபூர்ண ஆனந்தஸ்வரூபமாயுள்ள (ஆத்மா), |
| **जगत्**<br>**ஜக³த்** | = | ஜகத்தை, |
| **व्याप्य**<br>**வ்யாப்ய** | = | யாபித்துக்கொண்டு, |
| **तदानन्दं**<br>**ததா³னந்த³ம்** | = | அதினுடைய (ஜகத்தினுடைய) ஆனந்தத்தை |
| **न वाञ्छति**<br>**ந வாஞ்ச²தி** | = | ஆசைப்படுகிறதில்லை. |

மாவை வியாபித்துக்கொண்டு இருக்கும் வெல்லமானது தித்திப்பை எப்படி ஆசைப்படுகிறதில்லையோ, அப்படியே ஜகத்தை வியாபித்துக் கொண்டு இருக்கும் பரிபூர்ண ஆனந்த ஸ்வரூபமாயுள்ள (சைதன்யம்) அதனுடைய (ஜகத்தினுடைய) ஆனந்தத்தை ஆசைப்படுகிறதில்லை.

[மாவில் தித்திப்பு கிடையாது. அதைத் தித்திக்கும் படிச் செய்வது அதில் கலந்துள்ள வெல்லம். அப்படி இருக்கையில் மாவிற்குள்ள தித்திப்பு தனக்குத் தேவை என்று வெல்லம் நினைக்குமா? அதேபோல, ஜகத்தில் ஆனந்தம் கிடையாது. ஆனந்த ஸ்வரூபியான ஆத்மா ஜகத்தில் வியாபித்திருப்பதால் ஜகத்தில் ஆனந்தம் தோன்றுகிறது. இப்படியிருக்க, ஜகத்தின் ஆனந்தம் தனக்கு வேண்டுமென்று ஆத்மா அபேக்ஷிப்பது நியாயமாகுமா?] **(11)**

## दारिद्र्याशा यथा नास्ति संपन्नस्य तथा तव ।
## ब्रह्मानन्द निमग्नस्य विषयाशा न संभवेत् ॥ १२ ॥

**தா³ரித்³ர்யாஶா யதா² நாஸ்தி ஸம்பன்னஸ்ய ததா² தவ ।**
**ப்³ரஹ்மானந்த³ நிமக்³னஸ்ய விஷயாஶா ந ஸம்ப⁴வேத் ॥ 12 ॥**

**यथा** = எப்படி,

**யதா²**

**संपन्नस्य** = அதிகப்பணக்காரனுக்கு,

**ஸம்பன்னஸ்ய**

**दारिद्र्याशा** = ஏழையாக இருக்கும் தன்மையில் ஆசை,

**தா³ரித்³ர்யாஶா**

**नास्ति** = கிடையாதோ,

**நாஸ்தி**

**तथा** = அப்படியே,

**ததா²**

**ब्रह्मानन्द निमग्नस्य** = பிரஹ்மத்தின் ஆனந்தத்தில்

**ப்³ரஹ்மானந்த³ நிமக்³னஸ்ய** மூழ்கிக்கிடக்கிற,

**तव** = உனக்கு,

**தவ**

**विषयाशा** = விஷயங்களில் ஆசை,

**விஷயாஶா**

**न संभवेत्** = ஸம்பவிக்காது.

**ந ஸம்ப⁴வேத்**

எப்படி அதிகப் பணக்காரனுக்கு ஏழையாயிருக்கும் தன்மையில் ஆசை கிடையாதோ, அப்படியே பிரஹ்மத்தின் ஆனந்தத்தில் மூழ்கிக் கிடக்கிற உனக்கு விஷயங்களில் ஆசை ஸம்பவிக்காது.

[பண ஸௌகர்யமுள்ளவன் தான் ஏழையாயிருக்க வேண்டுமென்று ஆசைப் படுவதில்லை. அப்படியே ஆனந்த ஸ்வரூபனாயிருக்கிற ஆத்மா ஆனந்த ஸ்வரூப மற்று வாஸ்தவத்தில் துக்கச் ரூபமாயுள்ள விஷயங்களில் ஆசை வைப்பது பொருத்தமாகுமா? இவ்விதம் 10, 11, 12 சுலோகங்களினால் ஆத்மாவிற்கு விஷயத்தில் ஆசையிருப்பது நியாயமில்லை யென்று 3 உதாஹரணங்களால் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. ஸமுத்திர திருஷ்டாந்தத்தினால் விஷயானந்தம் பிரஹ்மானந்தத்தின் லவலேசமே என்றும், வெல்ல திருஷ்டாந்தத்தினால் விஷயங்களில் தோன்றும் ஸுகலேசமும் கூட அவைகளின் சொந்தமல்ல, வாஸ்தவத்தில் பிரஹ்மத்தின் வியாப்தியினால் ஏற்பட்டது என்றும், மூன்றாவதான பணக்கார திருஷ்டாந்தத்தினால் விஷயங்கள் வாஸ்தவத்தில் துக்க ரூபமே தவிர அவைகளில் ஆனந்த லேசம்கூட கிடையாதென்றும் வாஸ்தவ நிலையை ஸ்ரீமத் ஆசார்யார் வர்ணித்திருக்கிறார்.] **(12)**

**विषं दृष्ट्राऽमृतं दृष्ट्वा विषं त्यजति बुद्धिमान् ।**
**आत्मानमपि दृष्ट्वा त्वं त्यजानात्मानमादरात् ॥ १३ ॥**

**விஷம் த்³ருஷ்ட்ரா(அ)ம்ருதம் த்³ருஷ்ட்வா விஷம் த்யஜதி பு³த்³தி⁴மான் ।**
**ஆத்மானமபி த்³ருஷ்ட்வா த்வம் த்யஜாநாத்மானமாத³ராத் ॥ 13 ॥**

**बुद्धिमान्** = புத்தியுள்ளவன்,
**பு$^{3}$த்$^{3}$தி$^{4}$மான்**
**विषं** = விஷத்தை,
**விஷம்**
**दृष्ट्वा** = பார்த்து,
**த்$^{3}$ருஷ்ட்வா**
**अमृतं** = அமிருதத்தையும்,
**அம்ருதம்**
**दृष्ट्वा** = பார்த்துவிட்டால்,
**த்$^{3}$ருஷ்ட்வா**
**विषं** = விஷத்தை,
**விஷம்**
**त्यजति** = விட்டுவிடுவான். (அப்படியே)
**த்யஜதி**
**त्वं** = நீ,
**த்வம்**
**आत्मानमपि** = ஆத்மாவையும்,
**ஆத்மானமபி**
**दृष्ट्वा** = பார்த்துவிட்டு,
**த்$^{3}$ருஷ்ட்வா**
**अनात्मानं** = ஆத்மாவல்லாததை,
**அனாத்மானம்**
**आदरात्** = வெகு ஞாபகமாய்,
**ஆத$^{3}$ராத்**
**त्यज** = விட்டுவிடு.
**த்யஜ**

புத்தியுள்ளவன் விஷத்தையும் அமிருதத்தையும் பார்த்துவிட்டால் விஷத்தை விட்டுவிடுவான். (அப்படியே) நீ ஆத்மாவையும் அநாத்மாவையும் பார்த்துவிட்டு ஆத்மா வல்லாததை வெகு ஞாபகமாய் விட்டுவிடு.

[விஷயானந்தம் வாஸ்தவமான ஆனந்தத்தின் அம்சம் என்று வைத்துக்கொண் டாலும், வெறும் தோற்றம் என்று வைத்துக்கொண்டாலும், ஆனந்தமே இல்ஐல யென்று வைத்துக்கொண்டாலும் ஆசைப்படத் தக்கதில்ஐலயென்பதை முன் மூன்று சுலோகங்களால் காட்டிவிட்டு அந்த விஷயானந்தம் அனுகூலம் செய்யாமலிருப்பது டன் பிரதி கூலமான பலஊனயும் கொடுக்கும் என்று சொல்வதற்காக இந்த சுலோகத் தில் விஷ திருஷ்டாந்தம் காட்டப்பட்டிருக்கிறது. ஒரு பதார்த்தம் கெடுதஐலத்தான்

செய்யுமென்று தெரிந்தும் அதை எடுத்துக்கொள்வது புத்திசாலி செய்யக் கூடிய காரியமில்லை என்று காட்டுகிறார்.] **(13)**

## घटावभासको भानुर्घटनाशे न नश्यति ।
## देहावभासकः साक्षी देहनाशे न नश्यति ॥ १४ ॥

**க⁴டாவபா⁴ஸகோ பா⁴னுர்க⁴டநாஶே ந நஶ்யதி ।**
**தே³ஹாவபா⁴ஸக꞉ ஸாக்ஷீ தே³ஹநாஶே ந நஶ்யதி ॥ 14 ॥**

| | | |
|---|---|---|
| **घटावभासकः** க⁴டாவபா⁴ஸக꞉ | = | குடத்தைப் பிரகாசிக்கும்படிச் செய்கிற, |
| **भानुः** பா⁴னு꞉ | = | ஸூர்யன், |
| **घटनाशे** க⁴டநாஶே | = | குடத்திற்கு நாசம் வரும்போது, |
| **न नश्यति** ந நஶ்யதி | = | தான் நாசத்தை அடைவதில்லை. (அப்படியே), |
| **देहावभासकः** தே³ஹாவபா⁴ஸக꞉ | = | தேஹத்தைப் பிரகாசிக்கும்படிச்செய்கிற, |
| **साक्षी** ஸாக்ஷீ | = | ஸாக்ஷியாயிருக்கிற ஆத்மா, |
| **देहनाशे** தே³ஹநாஶே | = | தேஹம் இல்லாமல் போகும்போது, |
| **न नश्यति** ந நஶ்யதி | = | இல்லாமல் போவதில்லை. |

குடத்தை விளங்கச் செய்கின்ற ஸூர்யன் குடம் அழிந்தாலும் தான் அழிவதில்லை. அதுபோல் தேஹத்தை விளங்கவைக்கும் ஆத்மா தேஹம் அழிந்தாலும் அழிவதில்லை.

[ஆத்மாவிற்கு உபாதிகளாக இருந்துகொண்டு ஆத்மா ஒன்று இருக்கிறது என்று காட்டிக்கொண்டிருக்கிற சரீரம் முதலான ஆத்மாவல்லாதவைகள் விலகிவிட்டால் ஆத்மாவே இல்லாமல் போய்விடுமோ என்கிற ஸந்தேஹம் வேண்டாம். குடத்தைக் காட்டிக்கொடுக்கும் ஸூர்யன் குடம் உடைந்துபோனால் தானும் இல்லாமல் போய்விடுகிறரா என்று கேட்கிறார்.] **(14)**

## निराकारं जगत् सर्वं निर्मलं सच्चिदात्मकम् ।
## द्वैताभावात् कथं कस्माद्भयं पूर्णस्य ते वद ॥ १५ ॥

**நிராகாரம் ஜக³த் ஸர்வம் நிர்மலம் ஸச்சிதா³த்மகம் ।**
**த்³வைதாபா⁴வாத் கத²ம் கஸ்மாத்³ப⁴யம் பூர்ணஸ்ய தே வத³ ॥ 15 ॥**

| | | |
|---|---|---|
| **जगत्** <br> **ஜக³த்** | = | பிரபஞ்சம், |
| **सर्वं** <br> **ஸர்வம்** | = | எல்லாம் (வாஸ்தவத்தில்), |
| **निराकारं** <br> **நிராகாரம்** | = | ரூபமற்ற, |
| **निर्मलं** <br> **நிர்மலம்** | = | நிர்மலமாயுள்ள, |
| **सच्चिदात्मकं** <br> **ஸச்சிதா³த்மகம்** | = | ஸத்தாகவும் ஞானஸ்வரூபமாகவும் இருக்கிற பிரஹ்மமேயாகும், |
| **द्वैताभावात्** <br> **த்³வைதாபா⁴வாத்** | = | இரண்டாவது பதார்த்தம் இல்லாததினுல், |
| **पूर्णस्य** <br> **பூர்ணஸ்ய** | = | பரிபூர்ணமாயிருக்கிற, |
| **ते** <br> **தே** | = | உனக்கு, |
| **कथं** <br> **கத²ம்** | = | எவ்விதம், |
| **कस्मात्** <br> **கஸ்மாத்** | = | எந்தக் காரணத்தினுல், |
| **भयं** <br> **ப⁴யம்** | = | பயம், (ஏற்படும்)? |
| **वद** <br> **வத³** | = | சொல்லு. |

ஜகத்து எல்லாம் (வாஸ்தவத்தில்) ரூபமற்ற நிர்மலமாயுள்ள ஸத்தாகவும் ஞானஸ்வரூபமாகவுமிருக்கிற பிரஹ்மமேயாகும். இரண்டாவது பதார்த்தம் இல்லா ததினுல் பரிபூர்ணமாயிருக்கிற உனக்கு எவ்விதம் எந்தக் காரணத்தைக்கொண்டு பயம் ஏற்படும்? சொல்லு.

[பயம் என்பது தன்னைத் தவிர வேறு இரண்டாவது பதார்த்தம் இருந்தால் வரக்கூடும். ஆத்மாவிற்கு இரண்டாவதாகத் தோன்றுகிற ஜகத்தும் வாஸ்தவத்தில் பிரஹ்ம ஸ்வரூபமாகவே இருப்பதால், ஜகத்தை இரண்டாவது பதார்த்தம் என்று எண்ணுவதற்கில்லை. ஆகையால் பயம் ஏற்படக் காரணமே கிடையாது.] **(15)**

## ब्रह्मादिकं जगत् सर्वं त्वय्यानन्दे प्रकल्पितम् ।
## त्वय्येव लीनं हि जगत् त्वं कथं लीयसे वद ॥ १६ ॥

**ப்³ரஹ்மாதி³கம் ஜக³த் ஸர்வம் த்வய்யானந்தே³ ப்ரகல்பிதம் ।**
**த்வய்யேவ லீனம் ஹி ஜக³த் த்வம் கத²ம் லீயஸே வத³ ॥ 16 ॥**

| | | |
|---|---|---|
| **ब्रह्मादिकं**<br>**ப்³ரஹ்மாதி³கம்** | = | பிரஹ்மா முதலான, |
| **जगत्**<br>**ஜக³த்** | = | ஜகத்து, |
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லாம், |
| **आनन्दे**<br>**ஆனந்தே³** | = | ஆனந்த ஸ்வரூபமாயுள்ள, |
| **त्वयि**<br>**த்வயி** | = | உன்னிடத்தில், |
| **प्रकल्पितम्**<br>**ப்ரகல்பிதம்** | = | நன்கு கல்பிக்கப்பட்டிருக்கிறது, |
| **जगत्**<br>**ஜக³த்** | = | ஜகத்தானது, |
| **त्वयि एव**<br>**த்வயி ஏவ** | = | உன்னிடத்திலேயே, |
| **लीनं हि**<br>**லீனம் ஹி** | = | லயத்தையும் அடைந்துவிடுகிறது.<br>(அப்படியிருக்க), |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **कथं**<br>**கத²ம்** | = | எப்படி, |
| **लीयसे**<br>**லீயஸே** | = | லயமடையமுடியும்? |
| **वद**<br>**வத³** | = | சொல்லு. |

பிரஹ்மா முதலான ஜகத்து எல்லாம் ஆனந்த ஸ்வரூபமாயுள்ள உன்னிடத்தில் நன்கு கல்பிக்கப்பட்டு இருக்கிறது. ஜகத்தானது உன்னிடத்திலேயே லயத்தையும் அடைந்துவிடுகிறது. (அப்படியிருக்க) நீ எப்படி லயம் அடைய முடியும்? சொல்லு.

[கயிற்றில் கல்பிக்கப்பட்டுத் தோன்றும் பாம்பு கயிற்றில் மறைந்துவிடும். அந்தப் பாம்புக்கு ஆதாரமாயிருக்கும் கயறு மறைந்துபோகாது. அப்படியே கல்பித மான ஜகத் மறையும்போது அதற்கு ஆதாரமாயிருக்கும் ஆத்மா மறையாது. இவ்விதமாக 14, 15, 16 சுலோகங்களினுல் ஆத்மாவல்லாத தேஹம் முதலிய பிரபஞ்சம் யாவும் ஆத்ம ஞானத்தினுல் இல்லாமல் போகும்போது ஆத்மாவும் இல்லை யென்று போய்விடுமே என்ற பயம் வேண்டாம் என்று ஸ்ரீமத் ஆசார்யார் உபதேசிக்கிறுர்.] **(16)**

**न हि प्रपञ्चो न हि भूतजातं**
**न चेन्द्रियं प्राणगणो न देहः ।**
**न बुद्धिचित्तं न मनो न कर्ता**
**ब्रह्मैव सत्यं परमात्मरूपम् ॥ १७ ॥**

**ந ஹி ப்ரபஞ்சோ ந ஹி பூ⁴தஜாதம்**
**ந சேந்த்³ரியம் ப்ராணக³ணோ ந தே³ஹ:।**
**ந பு³த்³தி⁴சித்தம் ந மனோ ந கர்தா**
**ப்³ரஹ்மைவ ஸத்யம் பரமாத்மரூபம்॥ 17 ॥**

**ब्रह्म एव** = பிரஹ்மம்தான்,
**ப்³ரஹ்ம ஏவ**

**सत्यं** = ஸத்யமாகவும்,
**ஸத்யம்**

**परमात्मरूपं** = உத்கிருஷ்டமான ஆத்மஸ்வரூபமாகவும் (இருக்கிறது).
**பரமாத்மரூபம்**

**प्रपञ्चः** = ஜகத்து,
**ப்ரபஞ்ச:**

**न हि** = அப்படியல்ல,
**ந ஹி**

**भूतजातं** = (பஞ்ச) பூதங்களின் கூட்டமும்,
**பூ⁴தஜாதம்**

**न हि** = அப்படியல்ல,
**ந ஹி**

**इन्द्रियं च** = இந்திரியமும்,
**இந்த்³ரியம் ச**

**न** = இல்லை,
**ந**

**प्राणगणः** = ஐந்துவித) பிராணக்கூட்டமும் (இல்லை),
**ப்ராணக³ண:**

| | | |
|---|---|---|
| **देहः**<br>**தே³ஹ:** | = | தேஹமும், |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **बुद्धिचित्तं**<br>**பு³த்³தி⁴சித்தம்** | = | புத்தியும் சித்தமும், |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **मनः**<br>**மன:** | = | மனஸும், |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **कर्ता**<br>**கர்தா** | = | செய்கிறவன் (அஹங்காரம்) |
| **न**<br>**ந** | = | இல்லை, |

பிரஹ்மம்தான் ஸத்யமாகவும் உத்கிருஷ்டமான ஆத்ம ஸ்வரூபமாகவும் இருக்கிறது. ஜகத்து அப்படியல்ல, பஞ்ச பூதங்களின் கூட்டமும் அப்படியல்ல, இந்திரியமும் இல்லை, ஐந்துவித பிராணக் கூட்டமும் இல்லை, தேஹமும் இல்லை, புத்தியும் இல்லை, சித்தமும் இல்லை, மனஸும் இல்லை, செய்கிறவன் (அஹங்கார மும்) இல்லை.

[ஸ்தூல பிரபஞ்சமோ ஸூக்ஷ்ம பிரபஞ்சமோ, ஸ்தூல சரீரமோ, ஸூக்ஷ்ம சரீரமோ, எல்லாம் ஆத்மாவல்ல வாதலால் அவை ஸத்ய பதார்த்தங்கள் ஆகா. பிரஹ்மம் அதாவது ஆத்மாதான் ஸத்யம்.] **(17)**

**सर्वं सुखं विद्धि सुदुःखनाशात् सर्वं च सद्रूपमसत्यनाशात् ।**
**चिद्रूपमेवं प्रतिभानयुक्तं तस्मादखण्डं परमात्मरूपम् ॥ १८ ॥**

**ஸர்வம் ஸுக²ம் வித்³தி⁴ ஸுது³:க²நாஶாத்**
**ஸர்வம் ச ஸத்³ரூபமஸத்யநாஶாத் ।**
**சித்³ரூபமேவம் ப்ரதிபா⁴நயுக்தம்**
**தஸ்மாத³க²ண்ட³ம் பரமாத்மரூபம் ॥ 18 ॥**

| | | |
|---|---|---|
| **सुदुःखनाशात्**<br>**ஸுது³:க²நாஶாத்** | = | துக்கமெல்லாம் நன்கு போய்விடுகிற படியால், |
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லாம், |

| | | |
|---|---|---|
| **सुखं**<br>**ஸுக²ம்** | = | ஆனந்தஸ்வரூபம் என்று, |
| **विद्धि**<br>**வித்³தி⁴** | = | அறி, |
| **असत्यनाशात्**<br>**அஸத்யநாஶாத்** | = | அஸத்யமெல்லாம் போய்விடுகிற படியால், |
| **सर्वं च**<br>**ஸர்வம் ச** | = | எல்லாவற்றையும், |
| **सद्रूपं**<br>**ஸத்³ரூபம்** | = | ஸத்ஸ்வரூபம் (என்று அறி), |
| **एवं**<br>**ஏவம்** | = | அப்படியே, |
| **प्रतिभानयुक्तं**<br>**ப்ரதிபா⁴னயுக்தம்** | = | பிரதிபலிக்கும் தன்மையோடுகூடியதால், |
| **चिद्रूपं**<br>**சித்³ரூபம்** | = | சித்ஸ்வரூபம் (என்று அறி), |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |
| **परमात्मरूपं**<br>**பரமாத்மரூபம்** | = | பரமாத்மஸ்வரூபமானது, |
| **अखण्डं**<br>**அக²ண்ட³ம்** | = | பிரிவற்றது. |

துக்கமெல்லாம் நன்கு போய்விடுகிறபடியால் எல்லாம் ஆனந்தஸ்வரூபம் என்று அறி. அஸத்யமெல்லாம் போய் விடுகிறபடியால் எல்லாவற்றையும் ஸத் ஸ்வரூபம் (என்று அறி). அப்படியே பிரதிபலிக்கும் தன்மையோடு கூடியதால் சித் ஸ்வரூபம் (என்று அறி) ஆகையால் பரமாத்ம ஸ்வரூபமானது பிரிவற்றது.

[ஒரு பதார்த்தம் சில ஸமயம் இருந்து சில ஸமயம் இல்லாமல் போனால் அது ஸத் பதார்த்தம் ஆகாது. அப்படியே சில ஸமயம் பிரகாசமாயிருந்து சில ஸமயம் பிரகாசமில்லாமல் போனால் அது சித் பதார்த்தம் ஆகாது. அப்படியே, சில ஸமயம் ஸுகமாயிருந்து சில ஸமயம் துக்கமாயிருந்தால் அது ஆனந்த பதார்த்த மாகாது. அவைகளுக்கெல்லாம் காலத்தினாலும் தேசத்தினாலும் வஸ்துவினாலும் வரையரை உண்டு. எப்பொழுதும் ஸத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும் இருக்கிற பரமாத்ம ஸ்வரூபத்திற்கு வரையரையே கிடையாது.] **(18)**

**चिदेव देहस्तु चिदेव लोकाः चिदेव भूतानि चिदिन्द्रियाणि ।**
**कर्ता चिदन्तःकरणं चिदेव चिदेव सत्यं परमार्थरूपम् ॥ १९ ॥**

**சிதே³வ தே³ஹஸ்து சிதே³வ லோகாः சிதே³வ பூ⁴தானி சிதி³ந்த்³ரியாணி ।**
**கர்தா சித³ந்தःகரணம் சிதே³வ சிதே³வ ஸத்யம் பரமார்த²ரூபம் ॥ 19 ॥**

| | | |
|---|---|---|
| **देहस्तु**<br>**தே³ஹஸ்து** | = | தேஹமும், |
| **चिदेव**<br>**சிதே³வ** | = | சைதன்யமே, |
| **लोका:**<br>**லோகாः** | = | உலகங்களும், |
| **भूतानि**<br>**பூ⁴தானி** | = | பூதங்களும், |
| **चिदेव**<br>**சிதே³வ** | = | சைதன்யமே, |
| **इन्द्रियाणि**<br>**இந்த்³ரியாணி** | = | இந்திரியங்களும், |
| **चित्**<br>**சித்** | = | சைதன்யம், |
| **कर्ता**<br>**கர்தா** | = | செய்கிறவன் (அஹங்காரம்), |
| **चित्**<br>**சித்** | = | சைதன்யம், |
| **करणं**<br>**கரணம்** | = | உள்கருவியான மனமும், |
| **चिदेव**<br>**சிதே³வ** | = | சைதன்யம்தான், |
| **सत्यं**<br>**ஸத்யம்** | = | ஸத்யமாகவும், |
| **परमार्थरूपं**<br>**பரமார்த²ரூபம்** | = | வாஸ்தவத்தில் இருக்கும் தன்மையுடை யதாகவும் இருப்பது, |
| **चिदेव**<br>**சிதே³வ** | = | சைதன்யம்தான், |

தேஹமும் சைதன்யமே, உலகங்களும் சைதன்யமே, பூதங்களும் சைதன்யமே, இந்திரியங்களும் சைதன்யமே, செய்கிறவன் (அஹங்காரம்) சைதன்யமே, உள் கருவியான அந்தக்கரணமும் சைதன்யம்தான். ஸத்யமாகவும் வாஸ்தவத்தில் இருக்கும் தன்மையுடையதாகவும் இருப்பது சைதன்யம் தான்.

[ஆத்மாவைத்தவிர்த்து வேறுகப் பிரகாசிக்கிறது போல் தோன்றும் ஜகத்தும், தேஹம் முதலானவைகளும் வாஸ்தவத்தில் பிரகாசஸ்வரூபமாயுள்ள சைதன்யமே தான் ஆகும். சைதன்யத்தின் வியாப்தி அவைகளுக்கு இல்லாமலிருந்தால் அவை பிரகாசிக்கவே முடியாது.] **(19)**

**न मे बन्धो न मे मुक्तिर्न मे शास्त्रं न मे गुरुः ।**
**मायामात्र विलासो हि मायातीतोहमद्वयः ॥ २० ॥**

**ந மே ப³ந்தோ⁴ ந மே முக்திர்ன மே ஶாஸ்த்ரம் ந மே கு³ரு: ।**
**மாயாமாத்ர விலாஸோ ஹி மாயாதீதோஹமத்³வய: ॥ 20 ॥**

| | | |
|---|---|---|
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **बन्धः**<br>**ப³ந்த⁴:** | = | ஸம்ஸாரபந்தம், |
| **न**<br>**ந** | = | கிடையாது, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **मुक्तिः**<br>**முக்தி:** | = | மோக்ஷமும், |
| **न**<br>**ந** | = | கிடையாது, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **शास्त्रं**<br>**ஶாஸ்த்ரம்** | = | சாஸ்திரமும், |
| **न**<br>**ந** | = | கிடையாது, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **गुरुः**<br>**கு³ரு:** | = | குருவும், |
| **न**<br>**ந** | = | கிடையாது, (இவையெல்லாம்), |
| **मायामात्र विलासो हि**<br>**மாயாமாத்ர விலாஸோ ஹி** | = | மாயையினுலேயே தோன்றுபவைகள், |

अहं = நான்,

அஹம்

मायातीतः = மாயைக்கு அப்பால்பட்டவனாய்,

மாயாதீத:

अद्वयः = இரண்டற்றவனாய் இருப்பவன்.

அத்³வய:

எனக்கு ஸம்ஸார பந்தம் கிடையாது, (ஆகையால்) எனக்கு மோக்ஷமும் கிடையாது, எனக்கு சாஸ்திரமும் கிடையாது, எனக்கு குருவும் கிடையாது. (இவையெல்லாம்) மாயையினாலேயே தோன்றுபவைகள். நான் மாயைக்கு அப்பால்பட்டவனாய், இரண்டற்றவனாய் இருப்பவன். **(20)**

**राज्यं करोतु विज्ञानी भिक्षामटतु निर्भयः ।**
**दोषैर्न लिप्यते शुद्धः पद्मपत्रमिवाम्भसा ॥ २१ ॥**

**ராஜ்யம் கரோது விஜ்ஞானீ பி⁴க்ஷாமடது நிர்ப⁴ய: ।**
**தோ³ஷைர்ன லிப்யதே ஶுத்³த⁴: பத்³மபத்ரமிவாம்ப⁴ஸா ॥ 21 ॥**

विज्ञानी = ஆத்மஸாக்ஷாத்காரமடைந்தவர்,

விஜ்ஞானீ

निर्भयः = பயமில்லாதவராக,

நிர்ப⁴ய:

राज्यं = ராஜ்யத்தை,

ராஜ்யம்

करोतु = ஆளட்டும், (அல்லது),

கரோது

भिक्षां = பிக்ஷைக்காக,

பி⁴க்ஷாம்

अटतु = அலையட்டும்,

அடது

पद्मपत्रं = தாமரை இலை,

பத்³மபத்ரம்

अम्भसा = ஜலத்தினால்,

அம்ப⁴ஸா

इव = (எப்படி அழுக்காக ஆகிறதில்லையோ

இவ அதைப் போலவே,

शुद्धः = மிகவும் சுத்தராயிருக்கிற ஞானி,

ஶுத்³த⁴:

**दोषैः** = எவ்வித தோஷங்களினுலும்,

**தோ³ஷை:**

**न लिप्यते** = அழுக்கடைவதில்லை.

**ந லிப்யதே**

ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்தவர் ராஜ்யத்தை ஆளட்டும். அல்லது பிக்ஷைக்காக அலையட்டும். பயமே வேண்டாம். தாமரை இலை ஜலத்தினுல் எப்படி அழுக்காக ஆகிறதில்லையோ அதைப்போலவே மிகவும் சுத்தராயிருக்கிற ஞானி எந்தக்காரியம் செய்தபோதிலும் எவ்வித தோஷங்களினுலும் அழுக்கடைவதில்லை.

**पुण्यानि पापकर्माणि स्वगानि न जाग्रति ।**
**एवं जाग्रत्पुण्यपापकर्माणि न हि मे प्रभोः ॥ २२ ॥**

**புண்யானி பாபகர்மாணி ஸ்வகா³னி ந ஜாக்³ரதி ।**
**ஏவம் ஜாக்³ரத்புண்யபாபகர்மாணி ந ஹி மே ப்ரபோ⁴: ॥ 22 ॥**

**स्वगानि** = ஸ்வப்னதசையிலுள்ள,

**ஸ்வகா³னி**

**पुण्यानि** = புண்ணிய கர்மாக்களோ,

**புண்யானி**

**पापकर्माणि** = பாபகர்மாக்களோ எல்லாம்,

**பாபகர்மாணி**

**जाग्रति** = விழிப்பு தசையில்,

**ஜாக்³ரதி**

**न** = கிடையாது,

**ந**

**एवं** = இவ்விதமாகவே,

**ஏவம்**

**जाग्रत्पुण्यपापकर्माणि** = விழிப்பு தசையில் செய்யப்படும்

**ஜாக்³ரத்புண்யபாபகர்மாணி** புண்ணிய பாபகர்மாக்கள்,

**प्रभोः** = எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கிற,

**ப்ரபோ⁴:**

**मे** = எனக்கு,

**மே**

**न हि** = கிடையாது.

**ந ஹி**

ஸ்வப்னுவஸ்தையில் செய்யும் புண்ய கர்மாக்களோ, பாப கர்மாக்களோ எல்லாம் விழிப்பு தசையில் கிடையாது. இவ்விதமாகவே, விழிப்பு தசையில் செய்ய

ப்படும் புண்ணிய பாப கர்மாக்களும் எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கிற எனக்குக் கிடையாது. (22)

**कायः करोतु कर्माणि वृथा वागुच्यतामिह ।**
**राज्यं ध्यायतु वा बुद्धिः पूर्णस्य मम का क्षतिः ॥ २३ ॥**

**காயः கரோது கர்மாணி வ்ருதா[2] வாகு[3]ச்யதாமிஹ ।**
**ராஜ்யம் த்[4]யாயது வா பு[3]த்[3]தி[4]ः பூர்ணஸ்ய மம கா க்ஷதிः ॥ 23 ॥**

| | | |
|---|---|---|
| **कायः**<br>**காயः** | = | சரீரம், |
| **कर्माणि**<br>**கர்மாணி** | = | கர்மாக்களை, |
| **करोतु**<br>**கரோது** | = | செய்யட்டும், |
| **इह**<br>**இஹ** | = | இங்கே, |
| **वाक्**<br>**வாக்** | = | வாக்கானது, |
| **वृथा**<br>**வ்ருதா[2]** | = | வீணாக, |
| **उच्यतां**<br>**உச்யதாம்** | = | சொல்லப்பட்டுக்கொண்டிருக்கட்டும், |
| **बुद्धिः वा**<br>**பு[3]த்[3]தி[4]ः வா** | = | அல்லது புத்தி, |
| **राज्यं**<br>**ராஜ்யம்** | = | ராஜ்யத்தைப்பற்றி, |
| **ध्यायतु**<br>**த்[4]யாயது** | = | தியானம் செய்து கொண்டிருக்கட்டும். (அதனால்), |
| **पूर्णस्य**<br>**பூர்ணஸ்ய** | = | பரிபூர்ணஸ்வரூபனான, |
| **मम**<br>**மம** | = | எனக்கு, |
| **का**<br>**கா** | = | என்ன, |
| **क्षतिः**<br>**க்ஷதிः** | = | கெடுதல்? |

சரீரம் கர்மாக்களைச் செய்யட்டும், இங்கே வாக்கானது வீணுக சொல்லப் பட்டுக் கொண்டிருக்கட்டும், அல்லது புத்தி ராஜ்யத்தைப் பற்றி தியானம் செய்து கொண்டிருக்கட்டும். (அதனுல்) பரிபூர்ண ஸ்வரூபனுன எனக்கு என்ன கெடுதல்?

**प्राणाश्चरन्तु तद्धर्मैः कामैर्वा हन्यतां मनः ।**
**आनन्दामृतपूर्णस्य मम दुःखं कथं भवेत् ॥ २४ ॥**

**ப்ராணாஶ்சரந்து தத்³த⁴மைம்ː காமைர்வா ஹன்யதாம் மனː ।**
**ஆனந்தா³ம்ருதபூர்ணஸ்ய மம து³ːக²ம் கத²ம் ப⁴வேத் ॥ 24 ॥**

| | | |
|---|---|---|
| **प्राणाः** ப்ராணுː | = | பிராணங்கள் (இந்திரியங்கள்), |
| **तद्धर्मैः** தத்³த⁴மைம்ː | = | அதன் ஸ்வபாவத்திற்குத் தக்கபடி, |
| **चरन्तु** சரந்து | = | ஸஞ்சரிக்கட்டும், |
| **मनः वा** மனː வா | = | அல்லது மனஸ், |
| **कामै** காமை | = | ஆசைகளினுல், |
| **हन्यतां** ஹன்யதாம் | = | பீடிக்கப்படட்டும் (அதனுல்), |
| **आनन्दामृतपूर्णस्य** ஆனந்தா³ம்ருதபூர்ணஸ்ய | = | ஆனந்தமாகிற அமிருதம் நிரம்பிய, |
| **मम** மம | = | எனக்கு, |
| **दुःखं** து³ːக²ம் | = | துக்கமானது, |
| **कथं** கத²ம் | = | எப்படி, |
| **भवेत्** ப⁴வேத் | = | ஏற்படும்? |

பிராணங்கள் (இந்திரியங்கள்) அததன் ஸ்வபாவத்திற்குத் தக்கபடி ஸஞ்சரிக் கட்டும், அல்லது மனஸ் ஆசைகளினுல் பீடிக்கப்படட்டும். (அதனுல்) ஆனந்தமாகிற அமிருதம் நிரம்பிய எனக்கு துக்கமானது எப்படி ஏற்படும்?

[சரீரம், இந்திரியங்கள், மனஸ், புத்தி, இவைகளுக்கெல்லாம் அதீதமாயிருப் பதே ஆத்மாவானதினுல், அவைகளுடைய தனித்தனி வியாபாரங்களோ, அவைக

ளால் ஏற்படக்கூடிய ஸுக துக்கங்களோ ஆத்மாவிற்கு ஸம்பந்தப்பட்டவையல்ல வென்று 20 முதல் 24 வரையிலுள்ள ஐந்து சுலோகங்களில் விவரித்துத் கூறப்பட் டது.] **(24)**

## आनन्दाम्बुधिमग्नोऽसौ देही तत्र न दृश्यते।
## लवणं जलमध्यस्थं यथा तत्र लयं गतम्॥ २५ ॥

**ஆனந்தா³ம்பு³தி⁴மக்³னோ(அ)ஸௌ தே³ஹீ தத்ர ந த்³ருஶ்யதே।**
**லவணம் ஜலமத்⁴யஸ்த²ம் யதா² தத்ர லயம் க³தம்॥ 25 ॥**

**यथा** = எப்படி,
**யதா²**

**जलमध्यस्थं** = ஜலத்தின் நடுவில் இருக்கிற,
**ஜலமத்⁴யஸ்த²ம்**

**लवणं** = உப்பு,
**லவணம்**

**तत्र** = அங்கே (ஜலத்தில்),
**தத்ர**

**लयं** = லயத்தை,
**லயம்**

**गतं** = அடைந்துவிடுமோ (அப்படியே),
**க³தம்**

**आनन्दाम्बुधिमग्नः** = ஆனந்த ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கும்,
**ஆனந்தா³ம்பு³தி⁴மக்³ன:**

**असौ** = இந்த,
**அஸௌ**

**देही** = தேஹத்தையுடையவன் (ஜீவாத்மா),
**தே³ஹீ**

**तत्र** = அங்கே,
**தத்ர**

**न दृश्यते** = காணப்படுவதில்லை.
**ந த்³ருஶ்யதே**

எப்படி ஜலத்தின் நடுவில் இருக்கிற உப்பு ஜலத்தில் கரைந்து காணாமல் போய் விடுமோ அப்படியே ஆனந்த ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் இந்த தேஹத்தை உடையவன் (ஜீவாத்மா) அங்கே காணப்படுவதில்லை.

[உபாதிகளான சரீராதி ஸம்பந்தம் விலகினவுடன், அதற்கு முன் அவைகளையும் சேர்த்துக்கொண்டு "நான்" என்று அபிமானித்து வந்த ஜீவன் அவைக

ளால் ஏற்பட்ட நாம ரூபங்கள், ஸுக துக்கங்கள் முதலிய கட்டிலிருந்து விடுபட்டு ஸர்வ வியாபகமான ஆனந்த ரூபமான பிரஹ்மத்தோடு கலந்து விடுகிறபடியால், தனியாய் இருப்பதாகத் தெரியாது.] **(25)**

## इन्द्रियाणि मनः प्राणा अहंकारः परस्परम् ।
## जाड्य संगतिमुत्सृज्य मग्नः मयि चिदर्णवे ॥ २६ ॥

**இந்த்3ரியாணி மன: ப்ராணா அஹங்கார: பரஸ்பரம் ।**
**ஜாட்3ய ஸங்க3திமுத்ஸ்ருஜ்ய மக்3ன: மயி சித3ர்ணவே ॥ 26 ॥**

| | | |
|---|---|---|
| **इन्द्रियाणि**<br>**இந்த்3ரியாணி** | = | இந்திரியங்கள், |
| **मनः**<br>**மன:** | = | மனஸ், |
| **प्राणाः**<br>**ப்ராணா:** | = | பிராணன்கள், |
| **अहंकारः**<br>**அஹங்கார:** | = | அஹங்காரம் (இவையெல்லாம்), |
| **परस्परं**<br>**பரஸ்பரம்** | = | ஒன்றுக்கொன்று, |
| **जाड्य संगतिं**<br>**ஜாட்3ய ஸங்க3திம்** | = | ஜடத்தன்மையினால் ஏற்பட்ட சேர்க்கையை, |
| **उत्सृज्य**<br>**உத்ஸ்ருஜ்ய** | = | விட்டுவிட்டு, |
| **चिदर्णवे**<br>**சித3ர்ணவே** | = | சைதன்ய ஸமுத்ரமாகிய, |
| **मयि**<br>**மயி** | = | என்னிடத்திலேயே, |
| **मग्नः**<br>**மக்3ன:** | = | அமிழ்ந்து விடுகின்றன. |

இந்திரியங்கள், மனஸ், பிராணங்கள், அஹங்காரம் (இவையெல்லாம்) ஒன்று க்கொன்று ஜடத்தன்மையினுல் ஏற்பட்ட சேர்க்கையை விட்டுவிட்டு, சைதன்ய ஸமுத்திரமாகிய என்னிடத்திலேயே அமிழ்ந்துவிடுகின்றன.

[ஜீவனுடைய உபாதிகள் விலகுகின்றன வென்ருல் அவைகள் வேறு எங்கே யோ லயமடைகின்றன வென்று நிஜைக்கக் கூடாதென்பதற்காக அவைகள் மறைவ தும் ஆத்மாவில்தான் என்பதை இங்கு குறிப்பிடுகிருர்.] **(26)**

**आत्मानमञ्जसा वेद्मि त्वज्ञानं प्रपलायितम् ।**
**कर्तृत्वमद्य मे नष्टं कर्तव्यं वाऽपि न क्वचित् ॥ २७ ॥**

**ஆத்மானமஞ்ஜஸா வேத்³மி த்வஜ்ஞானம் ப்ரபலாயிதம் ।**
**கர்த்ருத்வமத்³ய மே நஷ்டம் கர்தவ்யம் வா(அ)பி ந க்வசித் ॥ 27 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मानं** <br> **ஆத்மானம்** | = | ஆத்மாவை, |
| **अञ्जसा** <br> **அஞ்ஜஸா** | = | நன்கு, |
| **वेद्मि** <br> **வேத்³மி** | = | அறிந்து விட்டேன், |
| **अज्ञानं तु** <br> **அஜ்ஞானம் து** | = | அக்ஞானமோ, |
| **प्रपलायितं** <br> **ப்ரபலாயிதம்** | = | ஓடிப்போய் விட்டது, |
| **अद्य** <br> **அக⁴** | = | இப்பொழுது, |
| **मे** <br> **மே** | = | என்னுடைய, |
| **कर्तत्वं** <br> **கர்தத்வம்** | = | செய்கிறவன் என்ற தன்மை, |
| **नष्टं** <br> **நஷ்டம்** | = | போய்விட்டது, |
| **कर्तव्यं** <br> **கர்தவ்யம்** | = | செய்யவேண்டியது என்பதும் (எனக்கு), |
| **क्वचित्** <br> **க்வசித்** | = | ஒருபோதும், |
| **न** <br> **ந** | = | கிடையாது. |

ஆத்மாவை நன்கு தெரிந்துகொள்கிறேன். அக்ஞானம் எங்கோ ஓடிவிட்டது, செய்கிறவன் என்ற தன்மை நீங்கி விட்டது. செய்யவேண்டியதும் ஒரு இடத்திலும் இல்லை.

[ஆத்மஞானம் ஏற்பட்டு அக்ஞானம் விலகின பிறகு, அவ்வக்ஞானத்தின் கார்யமான கர்த்ருத்வம் (செய்கிறவன் என்ற தன்மை), அதன் கார்யமான கர்மாக்கள், அவைகளின் பலனுன ஸுக துக்கங்கள், இவையெல்லாம் ஆத்மாவில்ஒட்டாதென்று 27, 28, 29 சுலோகங்களில் விவரிக்கப்படுகிறது.] **(27)**

**चिदमृतसुखराशौ चित्तफेनं विलीनं**
**क्षयमधिगत एवं वृत्तिचञ्चत्तरङ्गः ।**
**स्तिमितसुखसमुद्रो निर्विचेष्टः सुपूर्णः**
**कथमिह मम दुःखं सर्वदेकोऽहमस्मि ॥ २८ ॥**

**சித³ம்ருதஸுக²ராஶௌ சித்தபே²னம் விலீனம்**
**க்ஷயமதி⁴க³த ஏவம் வ்ருத்திசஞ்சத்தரங்க³: ।**
**ஸ்திமிதஸுக²ஸமுத்³ரோ நிர்விசேஷ்ட: ஸுபூர்ண:**
**கத²மிஹ மம து³:க²ம் ஸர்வதே³கோ(அ)ஹமஸ்மி ॥ 28 ॥**

| | | |
|---|---|---|
| **चिदमृतसुखराशौ** <br> **சித³ம்ருதஸுக²ராஶௌ** | = | சைதன்யமாகிற அமிருதமும் ஆனந்தமும் நிரம்பிய ஸமுத்திரத்தில், |
| **चित्तफेनं** <br> **சித்தபே²னம்** | = | மனஸ்ஸாகிற நுரை, |
| **विलीनं** <br> **விலீனம்** | = | நன்கு கரைந்துவிட்டது, |
| **एवं** <br> **ஏவம்** | = | அப்படியே, |
| **वृत्तिचञ्चत्तरङ्गः** <br> **வ்ருத்திசஞ்சத்தரங்க³:** | = | எப்பொழுதும் சலித்துக்கொண்டிருக்கும் மனோ விருத்தியாகிற அலை, |
| **क्षयं** <br> **க்ஷயம்** | = | நாசத்தை, |
| **अधिगतः** <br> **அதி⁴க³த:** | = | அடைந்து விட்டது, |
| **स्तिमितसुखसमुद्रः** <br> **ஸ்திமிதஸுக²ஸமுத்³ர:** | = | அசைவற்றிருக்கும் ஆனந்த ஸாகரம், |
| **निर्विचेष्टः** <br> **நிர்விசேஷ்ட:** | = | ஒருவித வியாபாரமும் அன்னியில், |
| **सुपूर्णः** <br> **ஸுபூர்ண:** | = | நன்கு நிரம்பியிருக்கிறது, |
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **सर्वदा** <br> **ஸர்வதா³** | = | எப்பொழுதும், |
| **एकः** <br> **ஏக:** | = | ஒருவனாகவே, |

| | | |
|---|---|---|
| **अस्मि**<br>**அஸ்மி** | = | இருக்கிறேன், (அப்படியிருக்கையில்), |
| **इह**<br>**இஹ** | = | இங்கே, |
| **मम**<br>**மம** | = | எனக்கு, |
| **दुःखं**<br>**து³:க²ம்** | = | துக்கம், |
| **कथं**<br>**கத²ம்** | = | எப்படி (வரும்)? |

சைதன்யமாகிற அமிருதமும் ஆனந்தமும் நிரம்பிய ஸமுத்திரத்தில் மனஸ்ஸாகிற நுரை நன்கு கரைந்து விட்டது. அப்படியே எப்பொழுதும் சலித்துக்கொண்டிருக்கும் மனோவிருத்தியாகிற அலை நாசத்தை அடைந்து விட்டது. அசைவற்றிருக்கும் ஆனந்த ஸாகரம் ஒருவித வியாபாரமும் அன்னியில் நன்கு நிரம்பியிருக்கிறது எப்பொழுதும் நான் ஒருவனாகவே இருக்கிறேன். அப்படி இருக்கையில் இங்கே எனக்கு துக்கம் எப்படி (வரும்)? **(28)**

**आनन्दरूपोऽहमखण्डबोधः**
**परात्परोऽहं घनचित्प्रकाशः ।**
**मेघा यथा व्योम न च स्पृशन्ति**
**संसारदुःखानि न मां स्पृशन्ति ॥ २९ ॥**

**ஆனந்த³ரூபோ(அ)ஹமக²ண்ட³போ³த⁴:**
**பராத்பரோ(அ)ஹம் க⁴னசித்ப்ரகாஶ: ।**
**மேகா⁴ யதா² வ்யோம ந ச ஸ்ப்ருஶந்தி**
**ஸம்ஸாரது³:கா²னி ந மாம் ஸ்ப்ருஶந்தி ॥ 29 ॥**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **आनन्दरूपः**<br>**ஆனந்த³ரூப:** | = | ஆனந்தஸ்வரூபன், |
| **अखण्डबोधः**<br>**அக²ண்ட³போ³த⁴:** | = | பிளவுபடாத ஞானஸ்வரூபன், |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **परात्**<br>**பராத்** | = | மேலான பதார்த்தத்தைக்காட்டிலும், |

**परः** = மேலானவன்,

**பரஃ**

**घनचित्प्रकाशः** = கெட்டியா ஞானஒளியானவன்ன,

**க4னசித்ப்ரகாஶஃ**

**यथा** = எப்படி,

**யதா2**

**मेघा** = மேகங்கள்,

**மேகா4**

**व्योम च** = ஆகாசத்தை,

**வ்யோம ச**

**न स्पृशन्ति** = தொடுவதில்லையோ, (அப்படியே),

**ந ஸ்ப்ருஶந்தி**

**संसारदुःखानि** = ஸம்ஸாரத்திலுள்ள துக்கங்கள்,

**ஸம்ஸாரது3ஃகா2னி**

**मां** = என்ஜன,

**மாம்**

**न स्पृशन्ति** = தொடாது.

**ந ஸ்ப்ருஶந்தி**

நான் ஆனந்த ஸ்வரூபன், துண்டுபடாத ஞான ஸ்வரூபன். நான் மேலான பதார்த்தத்திற்கும் மேலானவன், கனமான ஞான ஒளியானவன். எப்படி மேகங்கள் ஆகாசத்தைத் தொடுவதில்ஜலயோ, (அப்படியே) ஸம்ஸாரத்திலுள்ள துக்கங்கள் என்ஜனத் தொடாது. **(29)**

**अस्थि मांसपुरीषान्त्रचर्म लोमसमन्वितः ।**
**अन्नादः स्थूल देहः स्यादतोऽहं शुद्धचिद्यनः ॥ ३० ॥**

**स्थूलदेहाश्रिता एते स्थूलाद्भिन्नस्य मे न हि ।**

**அஸ்தி2 மாம்ஸபுரீஷாந்த்ரசர்ம லோமஸமன்விதஃ ।**
**அந்நாத3ஃ ஸ்தூ2ல தே3ஹஃ ஸ்யாத3தோ(அ)ஹம் ஶுத்3த4சித்3யனஃ ॥ 30 ॥**

**ஸ்தூ2லதே3ஹாஶ்ரிதா ஏதே ஸ்தூ2லாத்3பி4ன்னஸ்ய மே ந ஹி ।**

**अस्थि** = எலும்பு,

**அஸ்தி2**

**मांस** = மாம்ஸம்,

**மாம்ஸ**

| | | |
|---|---|---|
| **पुरीष**<br>**புரீஷ** | = | மலம், |
| **आन्त्र**<br>**ஆந்த்ர** | = | குடல், |
| **चर्म**<br>**சர்ம** | = | தோல், |
| **लोम**<br>**லோம** | = | ரோமம் இவைகளோடு, |
| **समन्वित:**<br>**ஸமன்விதः** | = | சேர்ந்ததாயும், |
| **अन्नाद:**<br>**அந்நாத³ः** | = | அன்னத்தை சாப்பிடுகிறதாயும், |
| **स्थूल देह:**<br>**ஸ்தூ²ல தே³ஹः** | = | ஸ்தூலசரீரம், |
| **स्यात्**<br>**ஸ்யாத்** | = | இருக்கும், |
| **अत:**<br>**அதः** | = | அதிலிருந்து, (வேறுக), |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **शुद्धचिद्यन:**<br>**ஶுத்³த⁴சித்³யனः** | = | கெட்டியான நிர்மலமான ஞானஸ்வரூபன், |
| **स्थूलदेहाश्रिता**<br>**ஸ்தூ²லதே³ஹாஶ்ரிதா** | = | ஸ்தூலதேஹத்தை ஆசிரயித்திருக்கும், |
| **एते**<br>**ஏதே** | = | இவைகள், |
| **स्थूलात्**<br>**ஸ்தூ²லாத்** | = | ஸ்தூலத்திலிருந்து, |
| **भिन्नस्य**<br>**பி⁴ன்னஸ்ய** | = | வேறுபட்ட, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **न हि**<br>**ந ஹி** | = | கிடையாது. |

எலும்பு, மாம்ஸம், மலம், குடல், தோல், ரோமம், இவைகளோடு சேர்ந்ததா யும் அன்னத்தை சாப்பிடுகிறதாயும் ஸ்தூல தேஹம் இருக்கும். அதிலிருந்து

